





உ
சிவமயம்

# நாட்டுக்கோட்டை நகரத்தார் மகாநாடு
# கோவிலூர்

பிரமாதீச ஆனி மீ 2-3
1973 சூன் 16-17

---

# மகாநாட்டு அறிக்கை
# தீர்மானங்கள்

---

வெளியீடு :
வரவேற்புக் குழுவினர்.





உ
சிவமயம்

# நாட்டுக்கோட்டை நகரத்தார் மகாநாடு

## கோவிலூர்

பிரமாதீச வருடம் ஆனி-2-3 தேதி சனி, ஞாயிறு

**1973 சூன் 16-17**





நகரத்தார் பெருமக்களே,

வணக்கம்.

நம் நகரத்தார் மகாநாடும், மாதர் மகாநாடும், இளைஞர் மகாநாடும் நடத்தவேண்டுமென பல வருடகாலமாய் பல நண்பர்கள் செய்து வந்த முயற்சி கோவிலூரில் 7—4—73ல் நடைபெற்ற ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திர மானேஜிங் சொசைட்டி வருடாந்திர விழாவில் வந்து கலந்துகொண்ட நகரத்தார்களின் சார்பில் மதுரை டாக்டர், (புதுப்பட்டி) திரு. எஸ். சண்முகம் M. B. B. S., F. R. C. S. தலைமையில் ஆலோசனைக் கூட்டம் நடைபெற்றது. அக்கூட்டத்தின் தீர்மானப்படி நமது சமூகத்தின் சீர்திருத்தங்கள் முன்னேற்றங்கள் பற்றி ஆராய்ந்து முடிவு எடுக்கவும் சமூக சீர்திருத்தம் காணவும் சமூகம் முன்னேற்றமடையவும் சங்கம் ஏற்படுத்தவும், மகாநாடு நடத்துவதற்கு முன் ஏற்பாடு செய்ய அமைப்பாளர்களாக பள்ளத்தூர் திரு. பிஎல். எல். பழனியப்பன் அவர்களையும், பாகனேரி திரு. டி. ஆர். எஸ்டி. கண்ணப்பன் அவர்களையும் தேர்ந்தெடுத்து அவர்கள் காரைக்குடியில் நகர சிவன் கோவில் அறுபத்துமூவர் குருபூசை மடத்தில் 22—4—73 மாலை 4 மணிக்கு 76 ஊர் நகரத்தார்களின் கூட்டத்தைக் கூட்டி அதில் கீழ்கண்டவர்களைக் கொண்ட வரவேற்புக்குழு அமைக்கப்பெற்றது.

வரவேற்புக்குழு தலைவர்:

தேவகோட்டை AL. AR. சோமனுதன் செட்டியார்

உபதலைவர்:

புதுப்பட்டி Dr. எஸ். சண்முகம் செட்டியார் M. B. B. S., F. R. C. S., மதுரை.

செயலாளர்கள் :

திரு. TR. ST. கண்ணப்பன், பாகனேரி
,, PL. L. பழனியப்பன், பள்ளத்தூர்
,, KM. சுப்பிரமணியன், கண்டனூர்
,, இராம. வெள்ளையன், நகர்மன்றத் தலைவர் தேவகோட்டை.

பொருளாளர்கள் :

திரு. வ. ராம. ராமசாமி செட்டியார் B. A., காரைக்குடி.
திரு. சித. சா. கணேசன் M. C. தேவகோட்டை

மேலும் 34 அங்கத்தினர்கள் சேர்த்து வரவேற்புக்குழு அமைக்கப்பெற்றது.

நகரத்தார்கள் வாழும் 76 ஊர்களையும் மூன்று பகுதிகளாகப் பிரித்து முதல் பகுதிக்கு செயலாளர் கண்டனூர் திரு. கே. எம். சுப்பிரமணியன் பொறுப்பு ஏற்றும், இரண்டாம் பகுதிக்கு செயலாளர் பாகனேரி திரு. டி. ஆர். எஸ்டி. கண்ணப்பன் பொறுப்பேற்றும், மூன்றும் பகுதிக்கு செயலாளர் திரு. இராம. வெள்ளையன் பொறுப்பு ஏற்றும் ஊர் ஊராகச் சென்று நகரத்தார்களையும், மாதர்களையும், இளைஞர்களையும் நேரில் பார்த்து ஊர்க் கோவில், விடுதிகளில் கூட்டங்கள் கூட்டி விரிவுரையாற்றி மகாநாட்டின் நோக்கங்களை எடுத்துக் கூறி அனைவரையும் வருகை தரும்படி அழைத்து வந்து குறிப்பிட்டபடி கோவிலூரில் பிரமாதீச வருடம் ஆனி மீ 2, 3, சூன் 16, 17—6—73ல் சரித்திரம் காணுத வகையில் நம் நகரத்தார் மகாநாடு கூட்டப்பெற்றது. கோவிலூர் மடாதிபதி ஸ்ரீலஸ்ரீ இராமனுத ஞானதேசிக சுவாமிகள் சிறந்த முறையில் ஆசியுரை வழங்கினுர்கள். மகாநாட்டுத் தலைவராக குளிபிறை திரு. பெரி. சின்னக்கருப்பன் செட்டியார் அவர்களும் திறப்பாளராக, திரு. சேவு. அ. அண்ணுமலை செட்டியார் அவர்

30-5

களும் தேசியக் கொடியேற்றிவைக்க, பாகனேரி திரு. வே. வேலாயுதம் செட்டியார் அவர்களும், இளைஞர் மகாநாட்டுக்கு தலைவராக மதுரை வங்கித் தலைவர் ஒ. சிறுவயல் எல். கிருஷ்ணன் M. A. அவர்களும், திறப்பாளராக காரைக்குடி நகர்மன்றத் தலைவர் திரு. சித. சிதம்பரம் M. L. A. அவர்களும் மாதர் மகாநாட்டுத் தலைவராக தேவகோட்டை திருமதி உமையாள்முத்து B. A., B. L., அவர்களும், திறப்பாளராக அரியக்குடி திருமதி சுலோசனா சேவுகன் செட்டி M. A. அவர்களும், சிறப்புரையாளராக தேவகோட்டை நகர்மன்ற உபதலைவர் திருமதி இலக்குமி வெள்ளையன் அவர்களும், பள்ளத்தூர் திருமதி சித. உமையாள் அவர்களும், பாகனேரி திருமதி கோமதி கண்ணப்பன் அவர்களும், தேவகோட்டை செல்வி லெ. ப. உமையாள் N. D. COM., அவர்களும், வலையபட்டி திருமதி சிகப்பி ஆச்சி அவர்களும், மானகிரி திருமதி அண. அழகம்மை B. SC., B. T., அவர்களும், வலையபட்டி திருமதி அழ. மீனாக்ஷி அவர்களும், மானகிரி செல்வி ம. கல்யாணி அவர்களும், நாட்டரசன்கோட்டை திருமதி ஆறு. கண்ணாத்தாள் ஆச்சி அவர்களும் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள். 16-6-73 இரவு 9-00 மணிக்கு தேவகோட்டை தமிழ்ப் பேராசிரியர் திரு. சுப. அண்ணாமலை M. A., L. T. அவர்கள் தலைமையில் செட்டிமார் நாட்டின் சிறந்த கவிஞர்கள், திரு. ரெ. சிங்காரவடிவேலன், புலவர் சோம. சிவப்பிரகாசம், திரு. அரு. சோமசுந்தரம் M. A., B. T., புலவர் அண்ணாமலை, புலவர் மீனவன், தமிழாசிரியர் அரு. சோமசுந்தரம், திரு. மா. கண்ணப்பன் M. A., B. T. அவர்களும் " நகரத்தார் குடும்பத்தில் நான் " என்ற கவியரங்கத்தை சிறப்பான முறையில் நடத்தியும் செட்டிநாட்டின் சிறந்த சொற்பொழிவாளர்கள் பலர் பங்குபெற்று மகாநாடு சிறப்புற நடைபெற பெரிதும் உதவினார்கள். செட்டிமார் நாட்டிலிருந்து ஆண்கள் சரியாக 1880 பேரும். பெண்கள் 932 பேரும் வந்து தீர்மான விவாதங்களில் கலந்துகொண்டு ஒவ்வொரு தீர்மானத்திற்கும் விளக்கம் கொடுத்து தீர்மானத்தை ஏகமனதாக நிறைவேற்றினார்கள். தீர்மானமும் வரவு செலவு கணக்கும் இத்துடன் இணைக்கப்பெற்றிருக்கிறது.

இந்த மகாநாடு சீரும் சிறப்புமாக நடைபெறுவதற்கு காரணமாக இருந்தது தங்கள் கடமையை எண்ணி வருங்கால நன்மைகளைக் கருதி மகாநாட்டில் வந்து கலந்துகொண்ட நகரத்தார்கள், தாய்மார்கள், இளைஞர்களின் ஊக்கம்தான் என்று வரவேற்புக் குழுவினர் கருதுகின்றனர். மகாநாட்டின் தீர்மானங்களை ஆங்காங்கே உள்ள நகரத்தார்கள் அனை வருக்கும் எடுத்துக்கூறி கட்டுப்பாட்டுடன் செயல்படுத்த ஆவன செய்ய வேண்டுமாய்க் கேட்டுக்கொள்கிறோம்.

மகாநாடு நடத்துவதற்கு எல்லா வசதிகளும் செய்து தந்த கோவிலூர் மடாலய நிருவாகிகளுக்கும், நன்கொடை, பிரவேசக் கட்டணங்கள் தந்துதவியவர்களுக்கும் எல்லா வகையாலும் மகாநாடு சீரும் சிறப்புமாக நடைபெறுவதற்கு ஒத்துழைத்துத் தொண்டாற்றிய அனைவருக்கும், மகாநாட்டு வேலைகளுக்கு இரவு பகலாகத் தங்கள் கார்களைத் தந்துதவிய தேவகோட்டை நகர்மன்றத் தலைவர் திரு. இராம. வெள்ளையன் அவர்களுக்கும், தேவகோட்டை திரு. KR. முத்தையா அவர்களுக்கும், கண்டனூர் திரு. KM. சுப்பிர மணியன் அவர்களுக்கும், மகாநாட்டுக்கு வாங்கிய காய்கறியில் ஸ்ரீரங்கம் சித. அன்னதான சத்திரத்தார்கள் ரூ. 1001/-க்கு காய்கறி, இலை, தேங்காய், வாங்கி இலவசமாக அனுப்பிய தற்கும், நம் வரவேற்புக்குழுவினர் சார்பில் நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

காரைக்குடி,<br>கோவிலூர்,<br>18—6—73

அன்புள்ள,

வரவேற்பு குழுவினர்.

உ
சிவமயம்

# நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் மகாநாட்டு ஐந்தொகை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நன்கொடை வரவு | ரூ | 11381 | 00 | | |
| 10 ரூபாய் புக் மூலம் வரவு | ரூ | 5110 | 00 | | |
| 5 ரூபாய் புக் மூலம் வரவு | ரூ | 995 | 00 | | |
| வசூல் செக்காக தந்தது | ரூ | 55 | 00 | | |
| Bank of Madura Ltd. பற்று | ரூ | | | 2995 | 20 |
| போன் அட்வான்ஸாக | ரூ | | | 100 | 00 |
| சமையல் சாமான்களை திரும்ப விற்றது வரவு | ரூ | 484 | 60 | | |
| கைமாத்து கணக்கு பற்று கோவிலூர் மடத்து மானேஜர் வசம் | ரூ | | | 200 | 00 |
| பிரயாணச் செலவு | ரூ | | | 1289 | 13 |
| ஸ்டேஷனரி செலவு | ரூ | | | 134 | 85 |
| விளம்பரச் செலவு | ரூ | | | 2524 | 64 |
| வீட்டு வாடகைக் கணக்கு | ரூ | | | 166 | 40 |
| அபிஷேக செலவு | ரூ | | | 221 | 38 |
| தபால், தந்தி, டெலிபோன் செலவு | ரூ | | | 369 | 60 |
| லைட்டு, கரண்டு, கணக்கு | ரூ | | | 528 | 00 |
| சாப்பாட்டு செலவு | ரூ | | | 8076 | 01 |
| சில்லரை செலவு | ரூ | | | 945 | 02 |
| | | 18025 | 60 | 17550 | 23 |
| இருப்பு | ரூ | | | 475 | 37 |
| | | 18025 | 60 | 18025 | 60 |

குறிப்பு: புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பெற்ற நாட்டுக்கோட்டை நகரத்தார் மத்திய சங்க தலைவர் குளிபிறை திரு. பெரி. சின்னக்கருப்பன் செட்டியார் அவர்களிடம் பேங் கணக்கு இருப்பில் செக்கு வட்டம் காசு 50 நீக்கி மதுரை வங்கி S/B A/C No. S. 1979 செக் மூலம் ரூ 2994-70ம் ரொக்க இருப்பு ரூ 475-37ம் கொடுத்து வரவேற்புக்குழு செயலாளர்கள், பொருளாளர்கள் ஆதரவு பெற்றுக்கொண்டிருக்கிறார்கள்.

உ

சிவமயம்

# நன்கொடை தந்த நகரத்தார்கள்.

| | |
|---|---|
| | ரூபாய் |
| நகரத்தார் சங்கம், மதுரை | 1001 |
| நகரத்தார் சங்கம், திருச்சி | 501 |
| நகரத்தார்கள், கோட்டையூர் | 501 |
| ராசாசர் முத்தையா செட்டியார், கானாடுகாத்தான் | 500 |
| நகரத்தார், குழிபிறை | 401 |
| நகரத்தார், குருவிக்கொண்டான்பட்டி | 301 |
| நகரத்தார், நற்சாந்துபட்டி | 301 |
| நகரத்தார், வலையபட்டி | 301 |
| நகரத்தார், நெற்குப்பை | 251 |
| உ. அ. பெரி. மு. அருணாசலம் செட்டியார், பள்ளத்தூர் | 201 |
| நகரத்தார், வேந்தன்பட்டி | 201 |
| பவ. ராம. குழந்தையன் செட்டியார், ராயவரம் | 200 |
| M. AL. அழகப்ப செட்டியார், கோட்டையூர் | 151 |
| அ. சொ., காரைக்குடி | 151 |
| சி. கரு. சி. கரு., ஒக்கூர் | 151 |
| AL. AR. சோமநாதன் செட்டியார், தேவகோட்டை | 101 |
| டாக்டர் S. சண்முகம், மதுரை | 101 |
| அண. கண. கண்ணப்ப செட்டியார், கல்லல் | 101 |
| கரு. கண. அ. சிறுவயல் | 101 |
| கும. நா. சுப. நா., செம்பனூர் | 101 |
| கும. நா. நா. சா., செம்பனூர் | 101 |
| VKN. கண்ணப்ப செட்டியார், நாட்டரசன்கோட்டை | 101 |
| முரு. ராம. முரு. ராமநாதன் செட்டியார், நடராஜபுரம் | 101 |
| உ. தெ. உ. சா. தேனப்ப செட்டியார், அழகாபுரி | 101 |

| | ரூபாய் |
|---|---|
| சுட. அரு. க. அரு. சம்பத் செட்டியார், கிழப்பூங்குடி | 101 |
| M. S. உடையப்ப செட்டியார், பள்ளத்தூர் (சேலம்) | 101 |
| M/s. ரயான் டிரேடர்ஸ் பிரைவேட் லிமிடெட் சேலம்-2 | 101 |
| A. M. P. அருணசலம் செட்டியார், சுப்பு & கோ. சேலம், பள்ளத்தூர் | 101 |
| M. A. பழநியப்ப செட்டியார், பள்ளத்தூர், சேலம் | 101 |
| M. S. சொக்கலிங்கம் செட்டியார், பூலாங்குறிச்சி | 101 |
| சி. நெ. வீர. நா. சுப்பிரமணியஞ் செட்டியார், கண்டனூர் | 101 |
| பெ. அழ. வெ. வீர. ராம. வீரப்ப செட்டியார், கண்டனூர் | 101 |
| அ. க. அ. சித. அள. சித. சிதம்பரம் செட்டியார், கோட்டையூர் | 101 |
| க. தெ. பொது, பி. அழகாபுரி | 101 |
| பெ. பெரி. சுப்பிரமணியஞ் செட்டியார், ஆவினிப்பட்டி | 101 |
| நகரத்தார், வேகுப்பட்டி | 101 |
| நகரத்தார், புதுப்பட்டி | 101 |
| நகரத்தார், உலகம்பட்டி | 101 |
| கிட்டா. நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கம், அலோர்ஸ்டார் | 101 |
| நகரத்தார், பூலாங்குறிச்சி | 101 |
| சோம. கருப்பஞ் செட்டியார், அமராவதிபுதூர் | 101 |
| A. AL. அழகப்ப செட்டியார், காரைக்குடி | 101 |
| S. RM. S. நாருயணன் செட்டியார், காரைக்குடி | 101 |
| சுப. ராம. லெ., நாட்டரசன்கோட்டை | 101 |
| சிக. அரு. க. சோம. ராமனுதன் செட்டியார், ஒக்கூர் | 101 |
| மெ. செ. மெ. மெ., காரைக்குடி | 101 |
| நகரத்தார், பட்டமங்கலம் | 100 |
| வயி. அ., கண்டனூர் | 100 |
| ராம. வீர. ராம. ராமசாமி செட்டியார், காரைக்குடி | 100 |
| யெ. மு. குடும்பத்தார், புதுவயல் | 90 |
| இராம. வெள்ளையன், தேவகோட்டை | 51 |

| | ரூபாய் |
|---|---|
| KR. முத்தையா, தேவகோட்டை | 51 |
| A. அருணாசலம், சேலம் | 51 |
| சுப. கண. கண்ணப்ப செட்டியார், அ. சிறுவயல் | 51 |
| சுப. ராம. லெ., மதகுபட்டி | 51 |
| சுப. ஆறுமுகம் செட்டியார், மதகுபட்டி | 51 |
| மு. சேதுராமன், மதகுபட்டி | 51 |
| பெரி. பெரி. சுப. பெரியகருப்பஞ் செட்டியார், கண்டரமாணிக்கம் | 51 |
| பெ. ஆத. ராம. ராமநாதஞ் செட்டியார், கண்டரமாணிக்கம் | 51 |
| மு. சின்ன. நாச்சியப்ப செட்டியார், கண்டரமாணிக்கம் | 51 |
| அண. நா. நாச்சியப்ப செட்டியார், கல்லல் | 51 |
| கயி. ஆரு. ஞா. ஞானபண்டிதன் செட்டியார், நாட்டரசன்கோட்டை | 51 |
| மெ. நடராஜன் செட்டியார், நாட்டரசன்கோட்டை | 51 |
| கண. க. சொ. அரு., நாட்டரசன்கோட்டை | 51 |
| M/s. தேவி சிட் பண்ட், சேலம்-4 | 51 |
| AL. ராமனுதன், சொக்கிகுளம் | 51 |
| AL. அழகப்பன், காரைக்குடி | 51 |
| M. A. M. முத்துராமன் செட்டியார், ராயவரம் | 51 |
| M. A. M. பழநியப்ப செட்டியார், ராயவரம் | 51 |
| வீ. தெ. வீர. வீரப்ப செட்டியார், கண்டனூர் | 51 |
| SV. KT. SM. கதிரேசன் செட்டியார், விருமதி | 51 |
| V. SP. நாச்சியப்ப செட்டியார், பி. அழகாபுரி | 51 |
| VR. K. AL. லெட்சுமணன் செட்டியார், கண்டவருயன்பட்டி | 51 |
| SM. AR. N. அருணாசலம் செட்டியார், காரைக்குடி | 51 |
| நகரத்தார், ராங்கியம் | 51 |
| அ. பெரி. அடைக்கப்ப செட்டியார், அரிமளம் | 51 |
| வீர. சு. ராம. அருணாசலம் செட்டியார், ஆத்தங்குடி | 51 |
| பெ. மு. சுப. சுப்பிரமணியஞ் செட்டியார், ஆத்தங்குடி | 51 |
| மு. மெ. முத்துராமன் செட்டியார், காரைக்குடி | 51 |

| | | ரூபாய் |
|---|---|---|
| ஆரு. பள. சி. பள. ப. சுந்தரஞ் செட்டியார், | காரைக்குடி | 51 |
| L. A. AM. AL., கோட்டையூர் | | 51 |
| M. S. மெய்யப்ப செட்டியார், காரைக்குடி | | 51 |
| ஆரு. பள. சி. பள. சித. பழநியப்ப செட்டியார், | காரைக்குடி | 51 |
| ராம. பெரியகருப்பன் செட்டியார், காரைக்குடி | | 51 |
| அழ. சொ. சொக்கலிங்கம் செட்டியார், காரைக்குடி | | 51 |
| S. VR. வீரப்ப செட்டியார், கண்டனூர் | | 51 |
| முத்து. உல. சுப. சுப்பிரமணியஞ் செட்டியார், | நடராஜபுரம் | 51 |
| N. சுப்பு, ராயவரம் (சேலம்) | | 51 |
| RM. P. AL. A. அழகப்ப செட்டியார், கோட்டையூர் | | 50 |
| நகரத்தார், கருங்குளம் | | 50 |
| | | 10672 |
| மேலும் 36 நகரத்தார்கள் ரூபாய் 50-க்கு குறைவாக | தந்தது கூடுதல் தொகை | 709 |
| | ஆக நன்கொடை வரவு | 11381 |
| வரவேற்புக்குழு 10 ரூபாய் டிக்கெட் 511-க்கு வரவு | | 5110 |
| மேற்படி 5 ரூபாய் டிக்கெட் 199-க்கு வரவு | | 995 |
| | ஆக நன்கொடை வரவு ரூபாய். | 17486 |

## மகாநாட்டுக்குத் தீர்மானம் அனுப்பியவர்கள்.

1. குழிபிறை நகரத்தார்கள்
2. மதுரை நகரத்தார் சங்கம்
3. கோ. அழகாபுரி நகரத்தார்
4. ஈரோடு நகரத்தார் சங்கம்
5. பலவான்குடி நகரத்தார்
6. கோயம்புத்தூர் நகரத்தார் சங்கம்
7. குருவிக்கொண்டான்பட்டி நகரத்தார்கள்
8. கோனபட்டு நகரத்தார்கள்
9. அரியக்குடி நகரத்தார்கள்
10. செவ்வூர் நகரத்தார்கள்
11. தேவகோட்டை நகரத்தார்கள்
12. சிறுகூடல்பட்டி நகரத்தார்கள்
13. புதுவயல் நகரத்தார்கள்
14. வேந்தன்பட்டி நகரத்தார்கள்
15. கண்டனூர் நகரத்தார்கள்
16. மேலச்சிவபுரி நகரத்தார்கள்
17. வலையபட்டி நகரத்தார்கள்
18. கண்டனூர் மாதர்கள்
19. கடியாபட்டி நகரத்தார்கள்
20. கோமதி கண்ணப்பன், பாகனேரி
21. சு. கரு. பழனியப்பன் அவர்கள்
22. கோட்டையூர் அக. அ. சித. அள. சிதம்பரம் செட்டியார்
23. கண்டனூர் ப. ராம. லெட்சுமணன்
24. சொ. புதூர் பழ. நா. நாராயணன்
25. இராம. வள்ளியப்பன், மதுரை
26. பட்டமங்கலம் வீர. அ. அடைக்கப்ப செட்டியார்
27. சிறுகூடல்பட்டி ப. அ. கருப்பன் செட்டியார்
28. காரைக்குடி மெ. தண்ணீர்மலை
29. நெற்குப்பை நண்பர்கள் து. க. மு. மு. & மு. செ.

30. சென்னை சேது சுந்தரம் அன்புமணி
31. ஹைஷாலா. சொ. வள்ளியப்பா
32. எஸ். அண்ணாமலை, கோயம்புத்தூர்
33. அண்ணாமலைநகர் Dr. வ. சுப. மாணிக்கம்
34. நாகர்கோவில் P. A. கருப்பன் செட்டியார்
35. கோட்டையூர் அழகப்பா அண்ணாமலை
36. கண்டனூர் கே. எம். சுப்பிரமணியம்
37. மானகிரி என். எஸ். பி. பஞ்சனதம்
38. தேவகோட்டை இராம. வெள்ளையன்
39. நச்சாந்துபட்டி முரு. இராமநாதன்
40. காரைக்குடி C. மோகன், CT. பழனியப்பன்
41. மதுரை மணிமேகலை மாதவன் M. B. B. S., M. D.
42. அரிமளம் செ. சோம. ராமசாமி
43. பாகனேரி TR. ST. கண்ணப்பன்
44. ஆத்தங்குடி நாரா. சித. நா. நாச்சியப்பன்
45. தேவகோட்டை கே. ஆர். முத்தையா

மேலேகண்ட தீர்மானங்கள் 45யும் 15—6—73 காலை 10 மணிக்கு கோவிலூரில் விஷயாலோசனைக் கமிட்டிக் கூட்டத்தில் வைத்து சகல தீர்மானங்களையும் ஆராய்ந்து முடிவாக 30 தீர்மானங்களை மட்டும் 17—6—73ந் தேதி மகாநாட்டுக்கு சிபார்சு செய்தார்கள். அதை அச்சிட்டு நகரத்தார்களுக்கு வினியோகம் செய்து, அதை சில திருத்த முடன் ஏகமனதாக ஆதரித்து அதையும் இத்துடன் பிரசுரித் துள்ளோம். இதுவே நகரத்தார் மகாநாட்டு தீர்மானம் :-

உ

*சிவமயம்*

1973ம் ஆண்டு, சூன் மாதம் 17உக்கு,
பிரமாதீச ஆண்டு ஆனித்திங்கள் 3ம் நாள், கோவிலூரில் நடந்த

# நாட்டுக்கோட்டை நகரத்தார் மகாநாட்டுத் தீர்மானங்கள்

## 1. திருமணம்.

1. ***திருமண அழைப்பு:-***
அழைப்புகளை அதிகம் விரித்துக் கொடுக்காமல் சுருக்கிக் கொடுக்கவேண்டும் என்று தீர்மானம் செய்திருக்கிறது.

2. ***திருமண நாள்:-***
மாப்பிளை அழைப்பு உள்பட திருமண விருந்தை ஒரு வேளை பலகாரம், ஒரு வேளை சாப்பாட்டுடன் முடித்துக் கொள்ளுகிறது. பெண் அழைப்பு திருமணத்தன்றே நடத்துகிறது. பெண் அழைப்பிற்கு பெற்றோர்கள், சகோதர சகோதரிகள், மாமக்காரர்கள், சடங்குக்காரர்கள், மட்டும் போய் ஒரு வேளை சாப்பாடு அல்லது சிற்றுண்டியுடன் முடித்துக்கொள்ளுகிறது.

3. பெண் அழைத்துப்போன பெண்ணின் தகப்பனுருக்கு ஒரு தாம்பாளத்தில் வெற்றிலை பாக்குடன் ரூ. 11/- மட்டும் வைத்துக்கொடுக்கிறது, தேங்காய், பழம், ரொக்கம், வாழி, சட்டி முதலிய எந்தவிதச் சாமான்களும் உறவினர் உள்பட யாருக்கும் கொடுப்பதில்லை, வாங்குகிறதில்லை.

4. மாமக்காரர் சடங்குக்காரர்களைத்தவிர மற்ற எல்லோரும் கால் ரூபாய் பணம் எழுதுகிறது.

5. ***உணவு:-***
பலகாரம் மூன்றுவகையும், சாப்பாட்டிற்கு ஐந்துவகைக் கறிகளும் செய்கிறது. ஐஸ்கிரீம், பாதாம் கீர், சோடாக் கலர் கொடுக்கிறதில்லை.

6. **சாமான் பரப்புதல்:-**

திருமண விட்டில், பெண்ணுக்கு அளிக்கப்படும் சீர்முறை சாமான்கள், மாப்பிளைக்கு கொடுக்கிற சாமான்கள் ஆகியவற்றை எந்த இடத்திலும் திருமணத்திற்கு முன்போ பின்போ பரப்புகிறதில்லை. மாமியார் சாமான்கள் கொடுக்கிறதில்லை சடங்கு பெட்டி வைப்பதில்லை.

7. **சீர் முறை:-**

எந்த விதமான முறைச்சீட்டுகளும் எழுதிக்கொள்கிறதில்லை. எந்த விதமான முறைக்கும் தொகைகள், சாமான்கள் முதலியன கொடுத்து வாங்கிக்கொள்கிறதில்லை.

8 **திருமணம்:-**

திருமணத்தைப் பொது இடங்களிலோ, கோவிலிலோ, மணமகள் வீட்டிலோ நடத்தலாம்.

9. செட்டிநாட்டிற்கு வெளியே நிகழும் நகரத்தார் திருமணங்களை ஆதரித்து முன்னதாகவே கோவிலில் பாக்கு வைத்து அவரவர் நகரக்கோவில்களிலே இருந்து மணமக்களுக்கு மாலைகள் வந்து திருமணத்தை நடத்திக் கொள்ளுகிறது, அதற்கு வைராவி போய்வரும் செலவை கல்யாணக்காரர் கொடுக்கிறது.

இதற்கு ஏற்றவாறு ஒன்பது நகரக்கோவில்களிலும் அட்டவணையில் எழுதிக்கொள்ளச் செய்கிறது. இந்த தீர்மானத்தின் நகல் 9 கோவில்களுக்கும் அனுப்புகிறது.

10. **மணச்சடங்குகள்:-**

திருப்பூட்டுகிறதைத் தவிர ஏனைய சடங்குகளை கூடிய வரை குறைத்துக்கொள்ளுகிறது. அதற்காக மேற்படி சடங்குகளுக்காகப் பணம் முதலிய எதுவும் கொடுத்து வாங்கிக்கொள்வதில்லை, குதிரை ஏறுகிறதில்லை.

11. ஒரே மண வீட்டில் பல திருமணங்களை ஒரே நேரத்தில் நடத்திக் கொள்ளலாம்.

## 2. பிற விசேடங்கள்.

12. மருந்து குடித்தல், தீர்த்தம் சாப்பிடுதல், விளையாட்டுப் பெட்டி வேவு, காப்புக்கட்டுப்புதுமை, கார்த்திகைப் புதுமை, திருவாதிரைப்புதுமை, ருது மங்கல்ய விழா, மணமக்களுக்கு பழம் தேங்காய் கொடுத்தல் ஆகிய விசேடங்களைச் செய்கிறதில்லை.

13. எந்த விசேடத்திலும் மாப்பிளைப் பலகாரம், சம்பந்தியார் பலகாரம், முதலியன வழங்குவதில்லை, அதற்காக ரூபாயும் கொடுப்பதில்லை.

14. பிள்ளை பிறந்து கூட்டி விடுவதற்கு சம்பந்தப்புரங்களுக்கு சாமானோ, பணமோ மற்றும் உணவு வகைகளோ கொடுப்பதில்லை. பிள்ளைப் பேரு கேட்க வருபவர்களுக்கு ஒவ்வொரு மிட்டாய் கொடுப்பதைத்தவிர ரொட்டி, சோடாக்கலர், 'பூ, பழம் வகையராக் கொடுப்பதில்லை. அதற்காக அந்த வீதியிலுள்ளவர்களுக்கு பழங்கள், ரூபாய்கள் கொடுப்பதில்லை.

15. பேசி முடித்துக்கொள்ளுதல், கழுத்துருவிற்குப் பொன் கொடுத்தல் ஆகியவற்றிற்கு ஐயாக்கள், நெருங்கிய உரவினர்கள் வீட்டைத்தவிர வேறு யாரையும் அழைப்பதில்லை.

அவர்களுக்கும், சம்மந்தப்புரங்களுக்கும், பணம், சாமான், பழம் எதுவும் கொடுப்பதில்லை. அந்த விசேடங்களுக்குப் போகும்போது ஒரு தாம்பாளத்தில் தேங்காய் 5, வாழைப்பழம் சீப்பு 2, மஞ்சள், குங்குமம், சந்தணம், புஷ்பம், வெத்திலை பாக்கு கொண்டுபோய்க் கொடுத்து, அதில் தேங்காய் 2, வாழைப்பழம் சீப்பு 1, வெத்திலை, பாக்குடன் திரும்ப வாங்கி வருகிறது.

16. திருமணம் ஆன பின் வேறுவைப்பதற்காகச் சாமான்களோ, பணமோ, பழங்களோ, எதுவும் இரு வீட்டார்களும் கொடுப்பதில்லை.

## 3. கேதம்.

17. பிரேதம் எடுக்கிற அன்று, பிரேதம் எடுத்த பிறகோ அல்லது முன்பாக வேறு வீடுகளிலோ, ஒரு பலகாரம் அல்லது ஒரு வர்க்கன்னம் கொடுக்கிறது.

18. பங்காளிகளுக்கும், மற்றவர்களுக்கும், கேதத்திற்கு ஒரு வேளை சாப்பாட்டுடன் முடித்துக் கொள்கிறது. கேதத்திற்கு வருபவர்களுக்கு சட்டி, டப்பி, பொரி, பணம் கொடுக்கிறதில்லை.

19. பந்தல் அன்றே போட்டு பிரேதம் எடுத்தவுடன் அதில் வைத்து தாலி வாங்குகிறது. சுற்றி வந்து சேலை போடும் வழக்கத்தை தவிர்க்க வேண்டும். கணவனை இழந்த பெண்கள் எந்த கலர் சேலையும் அணிந்து கொள்ளலாம்.

## 4. பிற.

20. சங்க வளர்ச்சிக்கும், சமூகப்பணிக்கும், உள் நாட்டில் நம் சமூகத்தார் நடத்திவரும் லேவாதேவி வட்டிக்கடை, வியாபாரங்கள், தொழில் நிறுவனம் முதலியவைகளில் ஒரு வருட லாபத்தொகைக்கு ஒரு சதவீதம் மகமை எழுதி வருடா வருடம் சங்கத்திற்கு அனுப்பி வைக்கும் படியும் அதுவும் பிரமாதீச வருடம் சித்திரை மாதம் முதல் பங்குனி மாதம் வரை உள்ள வருடம் முதல், நடை முறைக்கு கொண்டுவருவதென்றும், எல்லாக் கடைக்காரர் களையும் அவரவர்களே அனுப்பிவைக்கக் கேட்டுக் கொள்வதெனவும் தீர்மானம் செய்யப்பெற்றது.

21. **தீர்மான அமுல்:-**

மேற்படி தீர்மானங்கள் எல்லாம் இன்று அதாவது 17—6—73வக்கு பிரமாதீச ஆண்டு ஆனித்திங்கள் 2ம் நாள் முதல் அமுலுக்கு கொண்டுவருகிறது. ஆனால் இதற்கு முன் விசேடங்கள் தேதி நிச்சயிக்கப்பெற்று சாமான்கள் வாங்கியிருந்தால் அந்தந்த ஊர் நகரத்தார்

களிடம் இன்று முதல் 10 நாட்களுக்குள் தெரியப்படுத்தி ஆவணி மாதம் 31உக்குள் வைத்திருக்கும் விசேடங்களைச் செய்துகொள்ள விதிவிலக்கு உண்டு. அதற்கு மேல் கட்டுப்பாட்டுப்படியே நடந்து கொள்கிறது.

## 5. சங்கம்.

22. சீர் திருத்த தீர்மானங்களை அமுல் நடத்தவும், அவை அமுல் நடப்பதை கண்காணிக்கவும் மற்றும் மகாநாட்டில் நிறைவேற்றிய தீர்மானங்களை செயல்படுத்தவும், பொது வாக நகரத்தார் முன்னேற்றத்திற்கான எல்லா நடவடிக்கைகளை மேற்கொள்ளவும்—**நாட்டுக்கோட்டை நகரத்தார் மத்திய சங்கம்** என்ற பெயரில் நிறுவப் பெறுகிறது.

23. அச்சங்கத்தின் அலுவலர்களாக கீழ் காணப்பெறுபவர் கள் தேர்ந்தெடுக்கப்பெறுகிறார்கள். ஒரு தலைவர், ஒரு துணைத்தலைவர், ஒரு பொதுச் செயலாளர், ஒரு துணைச் செயலாளர், ஒரு பொருளாளர் தேர்ந்தெடுப்பதற்கு, குழிபிறை பெரி. சின்னக்கருப்பன் செட்டியாரை தலைவராகவும், பாகனேரி வே. வேலாயுதம் செட்டியார் அவர்களை துணைத் தலைவராகவும், கல்லல் கண்ணப்ப வள்ளியப்பாவை பொதுச் செயலாளராகவும் தேர்ந்து எடுத்து பாக்கி அலுவலர்களை காரியக்கமிட்டி கூடும் போது தேர்ந்தெடுப்பது என்றும் முடிவுசெய்யப்பெற்றது. தவிர நகரத்தார் ஊர்களில் 200 புள்ளிக்குள் உள்ள ஊர் களுக்கு ஒரு பிரதிநிதியும், அதற்கு மேல் ஒவ்வொரு 200 புள்ளிக்கும் ஒரு பிரதிநிதியும் வீதாசாரப்படி இன்று முதல் ஒரு மாதத்திற்குள் நகரத்தார் கூட்டத்தில் தேர்ந்தெடுத்து அனுப்பிவைக்கும்படி எல்லா ஊர் நகரத்தார்களையும் கேட்டுக்கொள்வதென்றும் மாதர்களில் 15 பிரதிநிதியும் இளைஞர்களில் 15 பிரதிநிதியும், நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கங்கள் ஒவ்வொன்றுக் கும் ஒரு பிரதிநிதியும், அவசியமான பொழுது தேவை யான உறுப்பினர் 10க்குள்ளும் தேர்ந்தெடுத்துக்

கொள்ளுகிறது என்று தீர்மானம் செய்யப்பெற்றது. பதவிகாலம் அலுவலர்களுக்கு ஒரு வருடம், பிரதிநிதிகளுக்கு 3 வருடம், இப்போது அலுவலர்களாக இருப்பவர்கள் உறுப்பினர்களாக 3 வருடம்வரை இருக்கலாம்.

24. இச்சங்க விதிகள் முதலியவற்றை வகுக்க 11 பெயர் கொண்ட குழு ஒன்று அமைக்கிறது.

25. நம் சமூகத்தை பின் தங்கிய சமூகமென அறிவிக்குமாறு தமிழக அரசை இம்மகாநாடு கேட்டுக்கொள்வதென்றும் அதற்கான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்வதென்றும் தீர்மானித்திருக்கிறது.

26. நமது பூர்வீக நகரான பூம்புகார் (காவேரிப்பட்டணம்) சீர் கேடடைந்திருந்ததை புதிப்பித்து கலைக்கோயில்களாக அமைத்து நமது வரலாறு நீடித்து பெருமை தர ஆக்கித்தந்த தமிழ்நாடு அரசிற்கு, நம் சமூகத்தார் சார்பாக இம்மாநாடு நன்றி தெரிவித்துக்கொள்ளுகிறது.

27. நம் தொழில் பிரமுகர்களை அவர்கள் தொழிற்சாலைகளுக்கு தேவையான பொருட்களைத் தயாரிப்பதற்கு செட்டிநாட்டுப் பகுதியில் சிறு தொழில்கள் ஆரம்பிப்பதற்கு உதவி செய்து ஆதரிக்கவேண்டும் என்றும், இப்பகுதியில் பல தொழிற்சாலைகள் நிறுவவேண்டும் என்றும், நகரத்தார் தொழில் நிலையங்களில் நகரத்தார்களுக்கு வேலைகொடுத்து உதவவேண்டும் என்றும் இம்மகாநாடு வேண்டிக்கொள்கிறது.

28. நகரத்தார் கல்வி, திருமணம் ஆகியவைகளுக்கு கடன் வழங்கும் கார்ப்பரேஷன் ஒன்று (Nagarathar financial Aid Corportion) நிறுவி அதன் வாயிலாக சிறந்த மாணவ மாணவியருக்கு வெளிநாட்டிலும் உள்நாட்டிலும் கல்வியும் தொழில் பயிற்சியும் பெறவும், திருமணம், கடன் வழங்குதல் போன்ற உதவிகளைச் செய்யவும் பொதுப்பணம் உள்ளவர்களிடம் பெற்று நம்

குல மக்களின் நன்மைக்காக பயன்படுத்த உதவுமாறு இம்மகாநாடு ஒருமனமாக வேண்டுகிறது.

### 6. மாதர் மகாநாட்டின் கோரிக்கை.

29. நகரத்தார் சமூக மாதர் சேவைக்கு மகளிர் இல்லம் அமைப்பது. அதில் குழந்தைகளுக்கான இல்லம், முதியோர் இல்லம், மகளிர் இல்லம் ஆகியவை தொடங்கி வாழ வசதியற்ற பெண் குழந்தைகளுக்கு உபகாரக் கல்வி அளிப்பது, கணவனுல் கைவிடப்பட்ட பெண்கள், முதிய பெண் மக்கள் ஆகியோர்களுக்கு வாழ வசதியளிப்பதுடன் அவர்களுக்கு கைத் தொழில் கற்பிக்கும் பொறுப்பையும் ஏற்று மாதர் சங்கங்கள் அமைத்து பல கிளைகள் நடத்தி வருவதென்று முடிவு செய்யப்பட்டது.

30. கணவனை இழந்த 30 வயதிற்குள்ப்பட்ட மாதர்கள் விரும்பினுல் நம் சமூகத்தில் மறுமணம் செய்து கொள்ளலாம்.

இந்த தீர்மானம் நகரத்தார் மகாநாட்டில் திருத்தம் செய்யப்பட்டது. இந்த தீர்மானத்தை எல்லா ஊர் நகரத்தார்களும் அந்தந்த ஊரில் ஒரு மாதத்திற்குள் கூட்டம் கூடி வேணும், வேண்டாம் என்ற பெரும்பகுதி முடிவு தெரிந்து தீர்மானம் செய்ய தள்ளி வைக்கப்பெற்றது.

31. இப்பொழுது ஏற்படுத்தப் போகும் மத்திய சங்கத்தில் பெண்களுக்கு பிரதிநிதித்துவம் கொடுக்கவேண்டுமென்று வந்த தீர்மானத்தை ஆதரிக்க தீர்மானம் செய்யப்பெற்றது.

### 7. இளைஞர் மகாநாட்டுத் தீர்மானம்.

32. வெளிநாடுகளிலிருந்து அகதிகளாகவரும் நமது இனத்தாருக்கு வெளிநாடுகளிலுள்ள உரிமைச் சொத்துக்

களுக்கு தகுந்த நஷ்டஈடு பெற்றுத்தர ஆவன செய்ய வேண்டியது.

33. நிறுவ இருக்கும் புதிய சங்கத்தில் ஒரு வேலை வாய்ப்பு அலுவலகத்தை ஏற்படுத்தி அதன் மூலம் வேலை வாய்ப்பு பெற்றுத்தரச் செய்யவேண்டும்.

34. சங்கத்தில் இளைஞர்களுக்கு முக்கியத்துவம் அளிக்கிறது.

35. திருமண வீட்டில் கூடியவரை நமது இளைஞர்கள் முன்னின்று உதவிகள் செய்கிறது.

36. நகரத்தார் பெருமக்கள் முதலீடு செய்து காரைக்குடியை மையமாகக்கொண்டு நகரத்தில் சிறப்பு அங்காடி தொடங்கி நடத்துவது என்றும், நகரத்தார்கள் அனைவரும் அதை ஆதரிக்கவேண்டும் என்றும், அதில் கிடைக்கின்ற வருமானம் அனைத்தும் நமது சமுதாய வளர்ச்சிக்கு செலவிடுவது என்றும் தீர்மானிக்கிறது.

37. நகரத்தார் ஆண் பெண் உயர்படிப்புப் படிக்கவும், வெளிநாடு சென்று படிக்கவும் தகுந்த ஏற்பாடுகள் செய்யவேண்டியது. வாங்கிய தொகையினை உரிய முறையில் கொடுக்க முன் வரவேண்டும்.

38. அனைத்து ஊரிலும் ஓய்வு நேரத்தில் இளைஞர்கள் சமூக சீர்திருத்தக்கருத்துக்களைப் பரப்ப முன் வரவேண்டும்.

மேற்படி தீர்மானங்களை இம்மகாநாடு ஏற்றுக்கொள்கிறது.

தலைவர் : **பெரி. சின்னக்கருப்பன் செட்டியார், குழிபிறை**

துணைத்தலைவர் : **வே. வேலாயுதம் செட்டியார், பாகனேரி**

பொதுச் செயலாளர் : **கண்ணப்பா வள்ளியப்பன், கல்லல்**

## வரவேற்புக் குழு

| | | |
|---|---|---|
| தலைவர் | : | அள. அரு. சோமனாதன் செட்டியார், தேவகோட்டை |
| உப-தலைவர் | : | Dr. எஸ். ஷண்முகம் செட்டியார், புதுப்பட்டி |
| செயலாளர்கள் | : | TR. ST. கண்ணப்பன், பாகனேரி |
| | | PL. L பழனியப்பன், பள்ளத்தூர் |
| | | K. M. சுப்பிரமணியன், கண்டனூர் |
| | | ராம. வெள்ளையன், நகர்மன்றத் தலைவர், தேவகோட்டை |
| பொருளாளர்கள் | : | V. RM. ராமசாமி செட்டியார், B. A. காரைக்குடி |
| | | சித. சா. கணேசன், தேவகோட்டை. |






